[23rd August 1960

*Rural electrification*

* 413 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பு செய்வதைக் குறித்து டெவலப்மெண்ட் கமிஷனர் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட கமிட்டியின் அறிக்கை கிடைத்து விட்டதா ?

(ஆ) அப்படியானால், அதன் விபரமென்ன ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : அந்தக் கமிட்டியின் அறிக்கை எப்போது கிடைக்கும்.

THE HON. SRI V. RAMAIAH : கூடிய விரைவில் கிடைக்கும்.

*Steel plant*

* 414 *Q.*—SRI P. G. MANICKAM :
SRI V. K. KOTHANDARAMAN :
SRI M. P. SARATHI :
} கனம்

கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் டெல்லியில் நடைபெற்ற தேசிய வளர்ச்சித் திட்டக் கமிட்டிக் கூட்டத்திலே நெய்வேலியில் கிடைக்கும் நிலக்கரியையும், சேலத்தில் கிடைக்கும் இரும்பையும் பயன்படுத்தி தமிழ்நாட்டில் இரும்புத் தொழிற்சாலை ஏற்படுத்தப்பட வேண்டுமென்று சென்னை ராஜ்ய நிதி அமைச்சர் தெரிவித்த திட்டத்தை மத்திய கவர்ன்மெண்டு ஏற்றுக் கொண்டதா ?

(ஆ) இதுபற்றி சென்னை சர்க்காருக்கும் மத்திய சர்க்காருக்கும் கடிதப் போக்கு வரத்துக்கள் நடந்துகொண்டிருக்கின்றனவா ?

(இ) அப்படியானால், விவரங்கள் யாவை ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) to (*c*) The Government of India have set up a Technical Committee to examine the proposals for setting up a steel plant in Madras State, based on the Salem Iron Ore and Neyveli Lignite. At the instance of this Government, a team of Technical Experts from East Germany visited this State recently, made a study of the resources available and have submitted a preliminary report on the establishment of a steel plant. The report is being studied by the Technical Committee with a view to reaching decisions regarding the proposed steel plant.